[10th August 1960

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir. Proposals for (i) Special repairs and improvements to the tank and (ii) Desilting-*cum*-reclamation of the tank are being finalised.

(*b*) The works are likely to be started in January 1961.

SRI K. GOPALA KOUNDER : ஏற்கனவே இந்த ஏரி வேலையை 1959–60-ல் எடுத்துக்கொள்ளுவதாக கனம் அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள். ஆனால் நாளது வரையிலும் ஒரு விதமான நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. ஆகையால் 1960–61-ம் ஆண்டிலாவது துரிதமாக இந்த வேலை எடுத்துக் கொள்ளப்படுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : ஜனவரி 1961-ல் அதாவது நடப்பு நிதி ஆண்டில் எடுத்துக்கொள்ளப்போவதாகத் தான் சொன்னேன்.

* 79 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருப்பத்தூர் தாலூகா, வளையாம்பட்டில் உள்ள லாலா ஏரி, துலசீபாய் ஏரிகளைப் பழுதுபார்க்க வேண்டுமென்று கோரி கிரிசமுத்திரம் கிராம மக்களிடமிருந்து 1951-ம் ௵ பிப்ரவரி ௴ 11, 1957-ம் ௵ ஆகஸ்டு ௴ 26, 1959-ம் ௵ டிசம்பர் ௴ 1 தேதிகளில் மகஜர் வந்ததா?

(ஆ) அப்படியானால், அவைகளின்மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Necessary sanction of estimate for the restoration of the Lala tank has been issued by the Board of Revenue (Food Production). Proposal of the Superintending Engineer (Food Production) for the restoration of the Thulasi Bai tank is awaited by the Board.

SRI S. M. ANNAMALAI : இந்த ஏரிகள் எப்பொழுதோ உடைந்துவிட்டன. சுமார் 15 ஆண்டு காலமாக பல மகஜர்கள் அனுப்பியும்கூட மகஜர் ஒன்றும் வரவில்லை என்று அமைச்சர் அவர்கள் பதில் சொன்னார்கள். இந்த ஏரிகள் மூலம் ஏறத்தாழ 1,000 ஏக்கர்களுக்கு மேல் பாசன வசதி கிடைக்கும். இவ்வளவு காலமாக இவைகளை சும்மா விட்டுவைப்பது சர்க்காருக்கு நியாயமா? ஆகையால் உடனடியாக இதைக் கவனித்து சீக்கிரம் நடவடிக்கை எடுக்க சர்க்கார் முன்வருவார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU : There was an order of ban. The ban order was lifted only in January 1959 so that each case may be considered on merits. In view of that, it was further examined and now an estimate of Rs. 23,000 has been sent from the Superintending Engineer for the restoration of the Lala tank. The department has also instructed the Superintending Engineer to expedite the proposal in respect of the Thulasi Bai tank. So, we have asked the estimates to be expedited.

10th August 1960]

SRI T. KARIA GOUNDER: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஏரிகளைப் புதிப்பிப்பது, பாலார் பேசின் ரூல்ஸ்படி நிறுத்தப்பட்டிருக்கிறதா? அப்படி உடைந்துபோன ஏரியைப் புதிப்பிக்க ரூல்ஸ் இடம் கொடுக்காது என்பதை தெரிவிப்பார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU: ரிப்பேர் செய்வது என்று முடிவு செய்துதான் எஸ்டிமேட் வந்திருக்கிறது. அதை முழுவதும் பரிசீலித்த பிறகு ரிப்பேர் செய்யப்படும்.

*Death of a worker*

* 80 Q.—SRI V. K. KOTHANDARAMAN: Will the Hon. the Minister for Finance be pleased to state the reasons for not holding a post-mortem examination over the dead body of a building worker who died on 8th March 1960 in the Mary's College, Tuticorin?

THE HON. SRI C. SUBRAMANIAM: In this case death was due to an accidental fall and there was no foul play or suspicion. As the incident was not reported to the Police no post-mortem examination was held over the body of the deceased.

*Police dogs*

* 81 Q.—SRI P. G. MANICKAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1959–60-ல் போலீஸ் நாய்களின் பராமரிப்புக்காக எவ்வளவு தொகை செலவழிக்கப்பட்டது?

(ஆ) கேஸ்களைத் துப்புத்துலக்க நாய்களைக் கூட்டிச் சென்றதற்காக எவ்வளவு தொகை செலவு செய்யப்பட்டது?

(இ) எத்தனை கேஸ்களில் துப்புத்துலக்க போலீஸ் நாய்கள் உபயோகப்படுத்தப்பட்டன?

(ஈ) இவைகளுள் எத்தனை கேஸ்கள் துப்புத்துலக்கப் பட்டன?

THE HON. SRI C. SUBRAMANIAM: (a) Rs. 8,023-08 nP.

(b) Rs. 5,546-98 nP.

(c) 184.

(d) 59.

SRI P. G. MANICKAM: சார், சென்னையிலிருந்து பல ஜில்லாக்களுக்கும் நாய்களை அனுப்ப வேண்டியிருப்பதால் அதிகச் செலவினங்கள் ஏற்படுகின்றன. ஆகையினால், நாய்களை வளர்ப்பதை இன்னும் சில ஜில்லாக்களுக்கு விஸ்தரித்து, அங்கெல்லாம் நாய் வளர்க்கும் திட்டத்தை அமுலாக்க சர்க்கார் பரிசீலனை செய்கிறதா, அல்லது இனி பரிசீலனை செய்யுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: அதற்குத் தனிக் கேள்வி போடவேண்டும்.